# ஸ்ரீபிரஸன்ன வேங்கடாசலபதி பெருமாள்
# குணசீலம்



முசறி வட்டம் – திருச்சி மாவட்டம்

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அருளிய
மோஹ முத்கரம் என்னும்

# பஜ கோவிந்தம்

உரையாசிரியர்:
வித்யா விசாரத, ந்யாயரத்த
கீழாத்தூர் **ஸ்ரீ நிவாஸாச்சாரியர்,** P.O.L.
ந்யாயசிரோமணி, ஹிந்திவிசாரத்

ஸ்ரீ

# பஜகோவிந்தம்

## முன்னுரை

அத்வைத மார்க்கத்தை நிலைநிறுத்திய பெருமை பெற்றவர் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர், உபநிடதங்களுக்கும், பகவத்கீதைக்கும், ஸ்ரீ வியாஸ ஸூத்திரங்களுக்கும் சிறந்த பாஷ்யம் எழுதி, ஞான மார்க்கத்திற்குச் சிறந்த பாதையை அமைத்துத் தந்த அதே சங்கரர் –பற்பல தேவதா ஸ்தோத்திரங்களையும் இயற்றி பக்தி மார்க்கத் தையும் பரப்பினார் எனின் மிகையாகாது.

அவர் எழுதிய பல பக்தி ஸ்தோத்ரங்களில் '**பஜகோவிந்தம்**' என்பது மிகவும் புகழ் பெற்றது. காரணம்,உருவில் சிறியதாக இருந்தாலும் உயர்ந்த உண்மைப் பொருளை விளக்குவதிலும், ராகமாகப்பாடுவதற்கு இசைந்த இசை நிலையிலும் இந்த ஸ்தோத் திரத்திற்கு ஈடு இதுவேதான். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் காசியில் தங்கியிருந்தபோது, ஒருகிழவர் ' டுக்ருஞ் கரணே" என்னும் இலக் கணச் சொல்லை திரும்பத் திரும்பக் கூறி மனப்பாடம் செய்வதைகக் கேட்டு, மனம் நொந்து, இந்த ஸ்தோத்திரத்தை இவர் இயற்றிய தாகப் பரம்பரைக் கதை உண்டு.

மோஹமுத்கரம் (அதாவது,மோகத்தைத் தகர்க்கும் சம்மட்டி) என்று முதற்பெயர் கொண்ட இந்த ஸ்தோத்ரம் 'பஜ கோவிந்தம்' என்று தொடங்குவதால் 'பஜகோவிந்தமம்' என்னும் பெயராலேயே அழைக்கப்படுகிறது.

பல தத்துவக் கருத்துக்கள் செறிந்த இந்த ஸ்தோத்ரத்தை எல்லோரும் படித்து, மனனம் செய்து மேன்மையடையவேண்டும். பதவுரையையும் கருத்துரையும் படித்தால், கூடவே ஸம்ஸ்கிருத மொழி ஞானமும் ஏற்படும் என்று அவை சேர்க்கப்பட்டுள்ளன.

பதிப்பகத்தார்

|| ஸ்ரீ ||

# பஜகோவிந்தம்

## 1
## கோவிந்தனைப் பஜனை செய்

பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே |
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷிதி 'டுக்ருஞ் கரணே' ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **ஹே மூடமதே!** | – | ஓ மூடமதியே! |
| **கோவிந்தம்** | – | கோவிந்தனை |
| **பஜ** | – | (மனத்தால்) நினைத்திரு |
| **கோவிந்தம்** | – | கோவிந்தனை |
| **பஜ** | – | (வார்த்தைகளால்) துதி செய் |
| **கோவிந்தம்** | – | கோவிந்தனை (கோவிந்தனுக்கு) |
| **பஜ** | – | (உடலால்) சேவை செய் |
| **ஸந்நிஹிதே** | – | நெருங்கியதான |
| **காலே** | – | (மரண) காலமானது |
| **ஸம்ப்ராப்தே** | – | வந்துவிட்டபோது |
| **'டுக்ருஞ் கரணே'** | – | 'டுக்ருஞ் கரணே' என்னும் வினைச்சொல் |
| **நஹி நஹி ரக்ஷிதி** | – | காப்பாற்றவே காப்பாற்றுது |

### கருத்துரை

ஓ மூடனே, இறைவனுக்கு எப்போழுதும் மனத்தாலும், வாக்காலும், உடலாலும் பணிபுரிவரை விட்டு, 'டுங்ருஞ் கரணே' போன்ற இலக்கணச் சொற்களைப் பயில்வதால் பலனில்லை. அது இறுதிக் காலத்தில் உன்னைக் காப்பாற்றாது. ஆகவே, கோவிந்தனையே உன் மனேவாக் காயங்களால் எப்பொழுதும் பஜனம் செய்து கொண்டிரு.

# 2

## பொன்னாசையை ஒழி !

மூட! ஜஹீஹி தநாகம த்ருஷ்ணாம்
குரு ஸத்புத்திம் விஷயவித்ருஷ்ணாம் |
யல்லபஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **ஹே மூட!** | – | ஓ மூடனே ! |
| **தநாகம–த்ருஷ்ணாம்** | – | பண வரவுக்கான பேராசையை |
| **ஜஹீஹி** | – | விட்டுவிடு |
| **விஷயத்ருஷ்ணாம்** | – | உலக சுகங்களில் ஆசையற்றதான |
| **ஸத்புத்திம்** | – | நல்ல புத்தியை |
| **குரு** | – | செய் |
| **நிஜகர்ம–உபாத்தம்** | – | தன் முன்வினையால் வந்து சேர்ந்த |
| **யத்** | – | எந்த |
| **வித்தம்** | – | பணத்தை |
| **லபலே** | – | அடைகிறாயோ |
| **தேந** | – | அந்தப் பணத்தினால் |
| **சித்தம்** | – | மனத்தை |
| **விநோதய** | – | சந்தோஷப்படுத்து. |

### கருத்துரை

ஒ மூடனே! இன்னும் பணம் வேண்டும் என்ற பேராசையை விட்டுவிடு, நீ முன் பிறவியில் செய்த தான தருமங்களுக்கேற்ப இப் பிறவியில் உனக்கு செல்வம் வருகிறது. அப்படித் தானாக வந்த செல்வத்துடன் திருப்தியடைந்திரு. பேராசையால் மனத்தைக் குழப்பிக்கொள்ளாதே.

# 3

## பெண்ணாசையை விடு !

நாரீ—ஸ்தநபர—நாபீ தேஸம்
  த்ருஷ்ட்வா மாகா மோஹாவேஸம் ।
ஏதந்—மாம்ஸ—வஸாதி—விகாரம்
  மநஸி விசிந்தய் வாரம் வாரம் ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| **நாரீ—ஸ்தநபர—நாபீ தேஸம்** | – | பெண்ணின் ஸ்தனங்கள், நாபிப் பகுதி என்பவைகளை |
| **த்ருஷ்டவா** | – | பார்த்து |
| **மோஹாவேஸம்** | – | மயக்க வேகத்தை |
| **மாகா:** | – | அடையாதே. |
| **குரு** | – | நல்ல புத்தியை |
| **ஏதத்** | – | இது |
| **மாம்ஸ—வஸாதி—விகாரம்** | – | மாமிசம், உவர்த்தண்ணீர் என்பவைகளின் மாற்றாவரும் |
| **(இதி)** | – | என்று |
| **மநஸி** | – | மனத்தில் |
| **வாரம் வாரம்** | – | அடிக்கடி |
| **விசிந்தய** | – | நினைப்பாயாக |

### கருத்துரை

ஹே மூடனே! ஒரு பெண்ணின் ஸ்தனங்கள், தொப்புள்பகுதி முதலியவைகளைப் பார்த்து மயங்கிவிடாதே. இதெல்லாம் மாமிச சத்தாலும் உவர்நீர் முதலிய அசுத்தமான பொருள்களாலும் தயாரானவை. எனவே, உனக்கு அவற்றின் மீது மயக்கம் ஏற்படும் போது சற்று நிதானித்து, அவைகள், ரத்தம், சீழ், மாமிசம் போன்ற அசுத்தப் பொருள்களல்லவா! என்று அடிக்கடி நினைப்பாயானால் உனக்கு அவற்றின்மீது மோகம் ஏற்படாது.

# 4

## வாழ்க்கையே நிலையில்லாதது !

நளிநீ–தளகத–ஜல–மதி–தரளம்
தத்வத்–ஜீவித–மதிஸய–சபலம் |
வித்தி வ்யாத்யபிமாந–க்ரஸ்தம்
லோகம் ஸோகஹதம் ச ஸமஸ்தம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **நளிநீதள–கத–ஜலம்** | – | தாமரை இலைமீதுள்ள தண்ணீர் |
| **அதிதரளம்** | – | மிகவும் சஞ்சலமானது |
| **தத்வத்** | – | அதேபோல் |
| **ஜீவிதம்** | – | வாழ்கையானது |
| **அதிஶய சபலம்** | – | மிகவும் சஞ்சலமானது |
| **ஸமஸ்தம்** | – | எல்லா |
| **லோகம் ச** | – | உலகையும் |
| **வ்யாதி–அபிமாந–க்ரஸ்தம்** | – | நோய், கர்வம் என்பவைகளால் விழுங்கப்பட்டதாகவும் |
| **ஸோகஹதம் ச** | – | வருத்தத்தால் தாக்கப்பட்டதாகவும் |
| **வித்தி** | – | அறிவாயாக |

### கருத்துரை

தாமரை இலை மீது ஒட்டாமல் அசைந்தோடிக் கொண்டிருக்கும் நீர்போல் மனித வாழ்க்கை நிலையற்றது. உலகில் எங்குபார்த்தாலும் நோயும் செருக்கும் தான் காணப்படுகிறது. எவனும் தான் சுகமாக இருப்பதாக நினைப்பதில்லை. எனவே, நிலையற்ற இந்த உலக வாழ்க்கைக்காக வீணாக அலையாதே என்பது கருத்து.

# 5

## சுற்றம் சுயநலத்துடன் கூடியது

யாவத் வித்தோபார்ஜந–ஸக்த:
தாவந் நிஜ–பரிவாரோ ரக்த: |
பஸ்சாஜ் ஜீவதி ஜர்ஜர–தேஹே
வார்த்தாம் கோSபி ந ப்ருச்சதி கேஹே ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| யாவத் | – | எதுவரை |
| வித்த–உபார்ஜந–ஸக்த: | – | பணம் சம்பாதிப்பதில் ஈடுபட்டிருக்கிறானோ |
| தாவத் | – | அதுவரை |
| நிஜபரிவார: | – | தன்னுடைய சுற்றமானது |
| ரக்த: | – | அன்பு கொண்டிருக்கும் |
| பஸ்சாத் | – | பிறகு |
| ஜர்ஜரதேஹே | – | தளர்ந்த உடலுடன் கூடியவனாய் |
| ஜீவதி (ஸதி) | – | பிழைத்திருக்கும்போது |
| கேஹே | – | வீட்டில் |
| கோபி | – | எவனும் |
| வார்த்தாம் | – | 'என்ன சங்கதி' என்று |
| ந ப்ருச்சதி | – | கேட்கமாட்டான் |

### கருத்துரை

ஒருவன் பணம் சம்பாதிக்கும் வரையில்தான் மனைவி மக்கள் எல்லோரும் அவனிடம் அன்பாகப் பழகிப்பணிவிடை செய்வார்கள். அவன் கிழத்தனத்தால் உடல் தளர்ந்து பணம் சம்பாதிக்காமல் வீட்டில் தங்கி விட்டாலுல், வீட்டில் யாரும் அவனிடம் பேசவும் மாட்டார்கள். (எனவே,'பணத்திற்காகத்தான் உன் சுற்றத்தார். உன்னைச் சுற்றி வருகிறார்கள் என்பதை உணர்ந்துகொள்' என்பது கருத்து.)

# 6

## உயிர் உள்ளவரைதான் உறவு

யாவத் பவநோ நிவஸதி தேஹே
தாவத் ப்ருச்சதி குஸலம் கேஹே ।
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மிந் காயே ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| யாவத் | – | எதுவரை |
| தேஹே | – | உடலில் |
| பவந: | – | மூச்சுக்காற்று |
| நிவஸதி | – | வாசம் புரிகிறதோ |
| தாவத் | – | அதுவரை |
| கேஹே | – | வீட்டில் |
| குஸலம் | – | (உன்) க்ஷேமத்தைப்பற்றி |
| ப்ருச்சதி | – | கேட்கிறார் |
| தேஹாபாயே | – | உடல் அழியும்போது |
| வாயௌ | – | பிராண வாயுவானது |
| கதவதி | – | சென்ற பிறகு |
| தஸ்மிந் | – | அந்த |
| காயே | – | உடலில் |
| பார்யா | – | மனைவி(யும்) |
| பிப்யதி | – | பயப்படுகிறாள் |

### கருத்துரை

நீ உயிரோடு உலவிவரும்போது வீட்டிலுள்ளவர்கள் அனைவரும் உன்னுடைய க்ஷேமத்தைப் பற்றி அடிக்கடி விசாரிக்கிறார்கள். உன் உயிர்போன பிறகு உன்னைக் கேட்பாரில்லை. நீ உயிரோடு இருக்கும்போது உன் மனைவி எந்த உடலை அணைத்துக் கூடிக்குலாவினாளோ அவளும்கூட உன் உடலைப் பார்த்து பயப்படுகிறாளல்லவா! ஆகவே, உறவைச் சதமென நினைக்காதே என்பது கருத்து.

# 7

## எவனும் தெய்வத்தை நினைப்பதில்லை

பாலஸ்தாவத் க்ரீடா ஸக்த:
தருணஸ் தாவத் தருணீஸக்த: |
வ்ருத்தஸ் தாவத் சிந்தாஸக்த:
பரே ப்ரஹ்மணி கோSபி ந ஸக்த: ||

### பதவுரை

**பால : தாவத்** – பாலகனோவென்றால்
**க்ரீடாஸக்த்:** – விளையாட்டில் பற்று கொண்டுள்ளான்
**தருண : தாவத்** – யௌவன வயதுள்ளவனோ வென்றால்
**தருணீ ஸக்த:** – யௌவனப் பெண்ணிடம் பற்று கொண்டுள்ளான்
**வ்ருத்த: தாவத்** – கிழவனோவென்றால்
**சிந்தாஸக்த:** – வருத்தத்துடன் கூடியுள்ளான்
**பரே ப்ரஹ்மணி** – இறைவனிடம்
**கோSபி** – எவனும்
**ந ஸக்த:** – பற்றுக் கொண்டானில்லை.

### கருத்துரை

மனிதனுக்கு பாலியம், யௌவனம், விருத்தாப்பியம் என மூன்று பருவங்கள் உள்ளன. இளைஞன் விளையாடுவதில் காலம் கழிக்கிறான்: வயது வந்தவன் பெண்ணுடன் காலம் கழிக்கிறான்: கிழவன் நோயாலும், மரணபயத்தாலும் எப்பொழுதும் வருத்தத்துடன் கழிக்கிறான்: எவனும் எந்தப் பருவத்திலும் தெய்வத்தைப் பற்றிச் சிந்தனையே செய்வதில்லை. '(என்னே உலக இயல்பு !' என்று வியக்கிறார்.)

# 8

## நீ யார் என்பதைக் கவனி

காதே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோऽய–மதீவ விசித்ர: |
கஸ்ய த்வம் க: குத ஆயாத:
தத்வம் சிந்தய யதிதம் ப்ராத: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| ஹே ப்ராத: | – | ஹே சகோதரனே |
| தே | – | உன்னுடைய |
| காந்தா | – | அன்பு மனைவி |
| கா | – | யார்? |
| தே | – | உன்னுடைய |
| புத்ர: | – | மகன் |
| க: | – | யார்? |
| அயம் | – | இந்த |
| ஸம்ஸார | – | சம்சாரம் என்பது |
| அதீவ | – | மிகவும் |
| விசித்ர: | – | விசித்திரமானது |
| த்வம்வா | – | நீதான் |
| கஸ்ய | – | எவனைச் சேர்ந்தவன் |
| குத: | – | எங்கிருந்து |
| ஆயாத: | – | வந்தாய்? |
| தத் | – | அப்படிப்பட்ட |
| இதம் | – | இந்த |
| தத்வம் | – | உண்மையை |
| சிந்தய | – | ஆலோசிப்பாயாக. |

### கருத்துரை

தம்பீ, உனக்கு மனைவி யார் ? மக்கள் யார்? இந்த உலக வாழ்க்கையே விசித்திரமானது. நீ யாருக்குச் சொந்தமோ எங்கிருந்து வந்தாயோ? இந்த உண்மையைப் பற்றி சிந்தனை செய். நீ இந்த உடலல்ல என்பதைப்பற்றியும் எதனால் பிறவி எடுத்தாய் என்பதைப் பற்றியும் சிந்தனை செய்து கொண்டிரு என்பது கருத்து.

# 9

## நல்லோருடன் இணங்கியிரு

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்தே நிர்மோஹத்வம் |
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்
நிஸ்சலதத்வே ஜீவந்முக்தி: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **ஸத்ஸங்கத்வே** | – | நல்லோரின் சேர்க்கை ஏற்பட்டால் |
| **நிஸ்ஸங்கத்வம்** | – | பற்றற்ற நிலை ஏற்படும் |
| **நிஸ்ஸங்கத்வே** | – | பற்றற்ற நிலை ஏற்படுமாகில் |
| **நிர்மோஹத்வம்** | – | மோகமற்ற நிலை ஏற்படும் |
| **நிர்மோஹத்வே** | – | மோகமற்ற நிலை ஏற்பட்டால் |
| **நிஸ்சலதத்வம்** | – | நிலையான உண்மைப் பொருள் தோன்றும் |
| **நிஸ்சலதத்வே** | – | நிலையான உண்மைப் பொருள் தோன்றினால் |
| **ஜீவந்முக்தி:** | – | ஜீவன்முக்திநிலை ஏற்படும். |

### கருத்துரை

நீ உண்மைப் பொருளை அறிந்த நல்லோர்களுடன் சேர்ந்து பழகினால் உலகப் பற்றை அறுப்பாய். உலகப் பற்று நீங்கினால் உன் மயக்கம் தொலையும், மயக்கம் தொலைந்தால் சாசுவதமான பரம்பொருளை அறிவாய். அதை அறிந்தால் நீ இந்த உலகில் வாழ்ந்திருக்கும் போதே ஞானியாக–அதாவது ஜீவன்முக்தனாக ஆகிவிடுவாய் என்பது கருத்து.

# 10

## ஆசையும் பொருளும் அழிந்துபோவன

வயஸி கதே க: காமவிகார:
ஶுஷ்கே நீரே க: காஸார: |
க்ஷீணே வித்தே க: பரிவார:
ஜ்ஞாதே தத்வே கஸ் ஸம்ஸார: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| வயஸி | – | வயதானது |
| கதே | – | கழிந்துவிட்டபோது |
| காமவிகார: | – | காமத்தின் செயல்கள் |
| க: | – | ஏது? |
| நீரே | – | நீரானது |
| ஷ்கே | – | உலர்ந்துவிட்டது |
| காஸார | – | தடாகம் |
| க: | – | ஏது? |
| வித்தே | – | செல்வமானது |
| க்ஷீணே | – | குறைந்துவிட்டால் |
| பரிவார: | – | சுற்றம் |
| க: | – | ஏது? |
| தத்வே | – | உண்மைப் பொருளானது |
| ஜ்ஞாதே | – | அறியப்பட்டபோது |
| ஸம்ஸார: | – | பிறவியாகிய ஸம்ஸாரம் |
| க: | – | ஏது? |

### கருத்துரை

யௌவனப்பருவம் தாண்டி விட்டால் காமத்தால் ஏற்படும் செயல் இருக்காது. தண்ணீர் இல்லாவிட்டால் நீர்நிலைகள் இராதது போல், பணம் இல்லாவிட்டால் சுற்றத்தார் எவரும் அருகில் இரார். பரம்பொருளை அறிந்து விட்டால் பிறப்பும் இறப்புமாகிய இச் சம்சாரம் இராது. ஆகவே, அழியக்கூடிய இன்பத்திற்காகவும் பொருளுக்காகவும் வீணாகக் காலத்தைக் கழிக்காமல் அழிவற்ற பரம் பொருளை அறிந்து, பிறவாமை பெறுவதே சிறந்தது என்பது கருத்து.

# 11

## கர்வப்படாதே!

மாகுரு தந-ஜந-யௌவந-கர்வம்
ஹரதி நிமேஷாத் காலஸ் ஸர்வம் ।
மாயா மய-மித-மகிலம் ஹித்வா
ப்ரஹ்ம பதம் த்வம் ப்ரவிஸ விதித்வா ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| **தந-ஜந-யௌவந** | – | பணம், சுற்றம், யௌவனப் பருவம் இவற்றாலான |
| **கர்வம்** | – | கர்வத்தை |
| **மா குரு** | – | செய்யாதே |
| **கால:** | – | காலம் (யமன்) |
| **நிமேஷாத்** | – | ஒரே நிமிடத்திற்குள் |
| **ஸர்வம்** | – | அனைத்தையும் |
| **ஹரதி** | – | எடுத்துச் சென்றுவிடும் |
| **இதம்** | – | இது |
| **அகிலம்** | – | எல்லாம் |
| **மாயாமயம் (இதி)** | – | மாயா மயமானது என்று |
| **விதித்வா** | – | அறிந்து |
| **ப்ரஹ்ம பதம்** | – | பிரம்ம நிலையை |
| **ப்ரவிஸ** | – | அடைவாயாக. |

### கருத்துரை

'நான் பணக்காரன்': 'எனக்குச் சுற்றத்தார் இருக்கின்றனர்':'நான் யௌவனப்பருவம் நிரம்பியவன்': என்ற வகையில் கர்வப்படாதே. ஒரே நிமிடத்தில் காலம் இவற்றையெல்லாம் கொள்ளை கொண்டுபோய்விடும். 'இந்த உலகெல்லாம் பொய்க்காட்சி: பிரம்மமே உண்மை யானது' என்று அறிந்து, நீயே பிரம்மமாக ஆகிவிடு.

# 12

## காலத்தின் விளையாட்டு

திநயாமிந்யெள ஸாயம் ப்ராத:
ஸிஸிர வஸந்தெள புநராயாத: |
கால: க்ரீடதி கச்சத்யாயு:
ததபி ந முஞ்ச தயாஸாவாயு: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **திநயாமிந்** | – | பகலும் |
| **யெள** | – | இரவும் |
| **ஸாயம்** | – | மாலையும் |
| **ப்ராத:** | – | காலையும் |
| **ஸிஸிர–வஸந்தெள** | – | சிசிரருதுவும் வஸந்தருதுவும் |
| **புந:** | – | மறுபடியும் |
| **ஆயாத:** | – | வந்துவிட்டது |
| **கால:** | – | காலம் |
| **க்ரீடதி** | – | விளையாடுகிறது |
| **ஆயு:** | – | ஆயுள் |
| **கச்சதி** | – | போகிறது |
| **ததபி** | – | அப்படியிருந்தும் |
| **ஆஸாவாயு** | – | ஆசையாகிய காற்று |
| **ந முஞ்சதி** | – | விடுவதில்லை |

### கருத்துரை

காலம் விளையாடுகிறது. பகலாகவும், இரவாகவும், மாலையாகவும், காலையாகவும் குளிர் காலமாகவும் வசந்தகாலமாகவும் மாறி மாறிக் காட்சியளிக்கிறது காலம். இப்படிக்காலம் மாறி மாறிவர, ஒருவனது உயிர்வாழ்க்கையும் முடிந்து விடுகிறது. இப்படியிருப்பது தெரிந்தும் ஆசை மட்டும் அகல்வதில்லை. உயிர்க்காற்று நீங்கினாலும் ஆசையாகிய காற்று நீங்குவதில்லை.

# 13

## ஆசையை அறவே ஒழி

காதே காந்தா தநகத–சிந்தா
வாதுல கிம் தவ நாஸ்தி நியந்தா ।
த்ரிஜகதி ஸஜ்ஜந–ஸங்கதி–ரேகா
பவதி பவார்ணவ–தரணே நௌகா ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| **ஹேவாதுல** | – | (வாதநோயால்) உடல் நடுக்கம் கொண்டவனே ! |
| **தே** | – | உனக்கு |
| **காந்தா** | – | மனைவி |
| **கா** | – | எவள்? |
| **தநகத சிந்தா** | – | பணத்தின்மீதுள்ள ஆசை |
| **கா** | – | உன்னுடைய (உன்னை) |
| **தவ** | – | பிடித்து நிறுத்துகிறவன் |
| **நியந்தா** | – | இல்லையா? |
| **நாஸ்தி கிம்?** | – | மூவுலகிலும் |
| **த்ரிஜகதி** | – | நல்லோர்களின் சேர்க்கை |
| **ஸஜ்ஜந ஸங்கதி:** | – | ஒன்றே |
| **ஏகா** | – | பிறவிக் கடலைக் கடப்பதற்கு |
| **பவார்ணவதரணே** | – | ஓடமாக |
| **நௌகா** | – | ஆகிறது. |
| **பவதி** | | |

### கருத்துரை

முதுமையில் வாத நோயால் உடல் நடுக்கம் கொண்ட கிழவனே, நீ கீழே சாய்ந்து விடாமல் உன்னைப் பிடித்து நிறுத்துபவர்கள் யாரும் இல்லையா? உமக்கு மனைவி என்பவள் யாரையா? பணம் பணம் என்று எப்பொழுதும் நினைத்திருந்தாயே. அந்தப் பணம் இப்போது உதவுகிறதா? ஆகவே, இனியாவது நல்லோர்களோடு சகவாசம் செய். அது ஒன்றுதான் உன்னை இந்தப் பிறவிக் கடலிலிருந்து கரையேற்றும் ஓடம் என்பதைத் தெரிந்துகொள்.

# 14

## எல்லாம் ஒருசாண் வயிற்றுக்காகத்தான் !

ஜடிலோ முண்டீ லுஞ்சிதகேஸ:
காஷாயாம்பர—பஹுக்ருத—வேஷ: |
பஸ்யந்நபி ச ந பஸ்யதி மூடோ
ஹ்யுதர—நிமித்தம் பஹுக்ருத—வேஷ: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **ஜடில:** | – | சடை தரித்தவனும் |
| **முண்டீ** | – | மொட்டையடித்தவனும் |
| **லுஞ்சித—கேஸ:** | – | மயிரைக் கத்தரித்துக் கொண்டவனுமான |
| **காஷாயாம்பர—பஹுக்ருத— வேஷ:** | – | காஷாயத் துணியால் பெரிதாக வேஷம் போட்டவனுமான |
| **மூட:** | – | மூடன் |
| **பஸ்யந்நபி** | – | பார்த்துக்கொண்டிருந்தாலும் |
| **ந பஸ்யதி** | – | பார்ப்பதில்லை |
| **உதரநிமித்தம்** | – | வயிற்றின் காரணமாக |
| **பஹுக்ருத—வேஷ:** | – | அதிகமாகச் செய்யப்பட்ட வேஷத்தை உடையவன் |

### கருத்துரை

ஒருவன் சடைதரித்து ரிஷிபோல் வேஷம் போடுகிறான். ஒருவன் மொட்டையடித்துக் கொள்கிறான். மற்றொருவன் தலைமயிரை முன்னும் பின்னுமாகக் கத்திரித்துக் கொள்கிறான். இன்னுமொருவன் காஷாயத்தை உடுத்தி எல்லோரையும் மயங்கச் செய்கிறான். இந்த மூடர்களெல்லாம் கண் இருந்தும் உலகம் பொய் என்பதைக் காண்பதில்லை. இவர்கள் சந்நியாசி வேஷம் போடுவது கூட இந்த ஒரு சாண் வயிற்றுக்காகத்தான்.

# 15

## ஆசை விடுவதில்லையே

அங்கம் களிதம் பலிதம் முண்டம்
தஸந விஹீநம் ஜாதம் துண்டம் |
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்ச–த்யாஸா–பிண்டம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **அங்கம்** | – | உடலானது |
| **களிதம்** | – | தளர்ந்துவிட்டது |
| **பலிதம்** | – | (மயிர்) நரைத்துவிட்டது |
| **முண்டம்** | – | மொட்டையாகிவிட்டது |
| **தஸநவிஹீநம்** | – | பற்களற்றதாகிவிட்டது |
| **துண்டம்** | – | துண்டாகவும் |
| **ஜாதம்** | – | ஆகிவிட்டது |
| **வ்ருத்த:** | – | கிழவன் |
| **தண்டம்** | – | தடியை |
| **க்ருஹீத்வா** | – | பிடித்துக்கொண்டு |
| **யாதி** | – | செல்கிறான் |
| **ததபி** | – | அப்படியிருந்தும் |
| **ஆஸாபிண்டம்** | – | பேராசையானது |
| **நமுஞ்சதி** | – | விடுவதில்லை |

### கருத்துரை

கிழத்தளத்தில் ஒருவனுடைய உடலானது தளர்ந்தும், தலைநரைத்தும், சிலருக்கு மொட்டையாகவும் பற்கள் உதிர்ந்தும் மரத்துண்டுபோலவும் ஆகிவிடுகிறது. அந்த நிலையில் தடியைப் பிடித்துக் கொண்டு நடக்கிறான். ஆனால் அவனையும் ஆசை விட்டபாடில்லை.

# 16

## துன்பத்திலும் ஆசைவிடுவதில்லை

அக்ரே வஹ்நி: ப்ருஷ்டே பாநு:
ராத்ரௌ சுபுக–ஸமர்ப்பித–ஜாநு: |
கரதல பிக்ஷஸ் தருதல வாஸ:
ததபி ந முஞ்ச–த்யாஶா– பாஶா: ||

### பதவுரை

| | |
|---|---|
| **அக்ரே** | – எதிரில் |
| **வஹ்நி:** | – நெருப்பு |
| **ப்ருஷ்டே** | – பின்புறத்தில் |
| **பாநு** | – சூரியன் |
| **ராத்ரௌ** | – இரவில் |
| **சுபுக–ஸமர்ப்பித–ஜாநு** | – முழங்காலில் முகவாய் கட்டையை வைத்திருக்கிறான் |
| **கரதலபிக்ஷ:** | – கையில் பிட்சை ஏந்துகிறான் |
| **தருதலவாஸ:** | – மரத்தடியில் வசிக்கிறான் |
| **ததபி** | – ஆசையாகிய பாசக்கயிறு |
| **ஆஶாபாஶ:** | – விடுவதில்லை |
| **நமுஞ்சதி** | |

### கருத்துரை

ஒருவன் தவம் செய்கிறான். பகலில் அவன் எதிரில் தீ, முதுகின் மீது சூரிய வெப்பம், இரவில் குளிர் தாங்காமல் தன் மோவாயை முழங்காலில் பொத்திக் கொள்கிறான். பிட்சைப் பாத்திரமும் இல்லாமல் கைகளில் பிச்சை வாங்குகிறான். குடிசையுமின்றி மரத்தடியில் தங்கு கிறான். இத்தகைய ஏழைக்கோலத்திலுள்ள முனிவனையும் ஆசை விடுவதில்லை.

# 17

## ஞானமில்லையேல் மோக்ஷமில்லை

குருதே கங்கா–ஸாகர–கமநம்
வ்ரத–பரிபாலந–மதவா தாநம் ।
ஜ்ஞாந–விஹீந: ஸர்வமதேந
முக்திம் ந பஜதி ஜந்மஸதேந ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| **கங்கா–ஸாகர–கமநம்** | – | கங்கைக்கும் கடலுக்கும் (ஸ்நானம் செய்வதற்காகச் செல்வதையாவது |
| **விரத–பரிபாலநம்** | – | விரதம் ஏற்பதையாவது |
| **அதவா** | – | அல்லது |
| **தாநம்** | – | தானத்தையாவது |
| **குருதே** | – | செய்கிறான் (ஆனால்) |
| **ஸர்வமதேந** | – | எல்லா மத ரீதியாகவும் |
| **ஜ்ஞாநவிஹீந** | – | ஞானமில்லாதவன் |
| **ஜந்மஸதேந** | – | நூறு பிறவியானாலும் |
| **முக்திம்** | – | மோக்ஷத்தை |
| **ந பஜதி** | – | அடைவதில்லை |

### கருத்துரை

கங்கைக்கும் கடலுக்கும் சென்று நீராடினாலும், விரதங்கள் பலவற்றை ஏற்றுச் செய்தாலும், தானங்கள் பல புரிந்தாலும் மோக்ஷம் கிடைக்காது. ஞானம் ஏற்படாமல் நூறு பிறவி எடுத்தாலும் முக்தியடைய முடியாது.

# 18

## வைராக்கியமே சுகம்

ஸுரமந்தர–தருமூல–நிவாஸ:
ஸய்யா பூஸ்–தரு–ஜநிதம் வாஸ: |
ஸர்வ–பரிக்ரஹ–போக–த்யாக:
கஸ்ய ஸுகம் ந கரோதி விராக: ||

### பதவுரை

| | |
|---|---|
| **ஸுரமந்தர–தருமூல–நிவாஸ:** | – கோயிலிலும் மரத்தடியிலும் வாசம் |
| **பூ:** | – தரை |
| **ஸய்யா** | – படுக்கை |
| **தரு–ஜநிதம்** | – மரத்திலிருந்து உண்டானது |
| **வாஸ** | – உடுப்பு |
| **ஸர்வ–பரிக்ரஹ–போக–த்யாக:** | – எல்லா உடமைப் பொருள்களையும் அனுபவிக்காமல் துறப்பது என்ற |
| **விராக:** | – வைராக்கியம் |
| **கஸ்ய** | – எவனுக்குத்தான் |
| **ஸுகம்** | – சுகத்தை |
| **ந கரோதி** | – செய்வதில்லை |

### கருத்துரை

கோயிலிலோ மரத்தடியிலோ வாசம் : தரைமீது படுக்கை : மரப் பட்டையினால் ஏற்பட்ட துணிதான் உடுப்பு ; தனக்கென ஏற்பட்ட பொருள்களில் எதையும் அநுபவிக்காமல் விடுதல் என்ற வைராக்கியம் எவனுக்குத்தான் சுகமளிக்காது? பற்றற்ற நிலையே பரமசுகமானது என்பது கருத்து.

# 19

## பிரம்மானந்தமே ஆனந்தம்

யோகரதோ வா போகரதோ வா
ஸங்கரதோ வா ஸங்க–விஹீந: |
யஸ்ய ப்ரஹ்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ ||

### பதவுரை

| | |
|---|---|
| **யோகரதோ: வா** | – யோகத்தில் ஈடுபட்டவனாக இருந்தாலும் |
| **போகரத: வா** | – போகத்தில் ஈடுபட்டவனாக இருந்தாலும் |
| **ஸங்கரத: வா** | – பிறர் சேர்க்கையில் ஈடுபட்டவனாக இருந்தாலும் |
| **ஸங்க்விஹீ ந:** | – பிறர் சேர்க்கை இல்லாதவனாக இருந்தாலும் |
| **யஸ்ய** | – எவனுடைய |
| **சித்தம்** | – மனதானது |
| **ப்ரஹ்மணி** | – பிரும்மத்தில் |
| **ரமதே** | – பற்றுகொண்டிருக்கிறதோ |
| **(ஸ:)** | – அவன் |
| **நந்ததி, நந்ததி, நந்ததி ஏவ** | – மகிழ்கிறான்; மகிழ்கிறான்; முக்காலமும் மகிழ்கிறான் |

### கருத்துரை

ஒருவன் உலக போகங்களைத் துறந்து யோகத்தில் ஈடுபட்டவனாக இருந்தாலும் சரி; போகங்களை அனுபவிப்பவனாக இருந்தாலும் சரி; பிறருடன் தொடர்பு வைத்துக் கொண்டவனாக இருந்தாலும் சரி; யாருடனும் தொடர்பற்றவனாக இருப்பினும் சரி; மேற்கண்ட எந்த நிலையிலும் பிரும்மத்தின் மீது மனம் செலுத்தியவனாக இருந்தானானால் அவன் முக்காலத்திலும் ஆனந்தத்தைப் பெறுகிறான்.

# 20

## யமன் அருகில் வராத உபாயம்

பகவத்கீதா கிஞ்சி–தத்தா
கங்கா–ஜல–லவ–கணிகா பீதா |
ஸக்ருதபி யேந முராரி–ஸமர்ச்சா
க்ரியதே தஸ்ய யமேந நஸர்ச்சா ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **யேந** | – | எவனால் |
| **பகவத்கீதா** | – | பகவத் கீதையானது |
| **கிஞ்சித்** | – | கொஞ்சமாவது |
| **அதீதா** | – | கற்கப்பட்டதோ |
| **(யேந)** | – | எவனாலே |
| **கங்கா–ஜல–லவ–கணிகா** | – | கங்கா ஜலத்துளியின் ஒரு பகுதியாவது |
| **பீதா** | – | குடிக்கப்பட்டதோ |
| **(யேந)** | – | எவனாலே |
| **ஸக்ருத் அபி** | – | ஒரு முறையாவது |
| **முராரி–ஸமர்ச்சா** | – | விஷ்ணு பூசை |
| **க்ரியதே** | – | செய்யப்படுகிறதோ |
| **தஸ்ய** | – | அவனுக்கு |
| **யமேந** | – | யமனாலே |
| **சர்ச்சா** | – | பேச்சு வார்த்தையானது |
| **ந க்ரியதே** | – | செய்யப்படுவதில்லை |

### கருத்துரை

எந்த மனிதன் தன் வாழ்நாளில் பகவத்கீதை என்ற புனித நூலின் ஒரு சிறு பகுதியையாவது படித்தானோ, கங்கை நீரின் ஒரு துளியையாவது அருந்தினானோ, ஒரு முறையாவது பகவானுக்குப் பூசை செய்தானோ அவனைப் பற்றி எமன் பேசுவதே இல்லை. அதாவது அவனுக்கு யமதண்டனை இல்லை. முக்தியடைகிறான் என்பது கருத்து.

# 21

## இறைவா ! என்னைக்காத்தருள்

புநரபி ஜநநம் புநரபி மரணம்
புநரபி ஜநநீ–ஜடரே ஸயநம் ।
இஹ ஸம்ஸாரே பஹு துஸ்தாரே
க்ருபயாபாரே பாஹி முராரே ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| **புநரபி** | – | மறுபடியும் |
| **ஜநநம்** | – | பிறப்பு |
| **புநரபி** | – | மறுபடியும் |
| **மரணம்** | – | இறப்பு |
| **புநரபி** | – | மறுபடியும் |
| **ஜநநீஜடரே** | – | தாயின் வயிற்றில் |
| **ஸயநம்** | – | படுக்கை (தங்குதல்) |
| **பஹு** | – | மிகவும் |
| **துஸ்தாரே** | – | கடக்க முடியாததும் |
| **அபாரே** | – | கரையில்லாததுமான |
| **இஹ** | – | இந்த |
| **ஸம்ஸாரே** | – | உலக வாழ்க்கையில் |
| **ஹேமுராரே** | – | ஹே முராரியே! |
| **க்ருபயா** | – | தயையினாலே |
| **பாஹி** | – | காப்பாற்று |

### கருத்துரை

ஹே பகவானே, இந்த சம்சாரமாகிய சமுத்திரம் கடக்க முடியாதது ; இதற்குக் கரையும் இல்லை. இதில் நான் மறுபடியும் மறுபடியும் பிறக்க வேண்டும் ; இறக்க வேண்டும். மறுபடியும் தாய் வயிற்றில் தங்கிப் பிறக்க வேண்டும். இப்படி முடிவில்லாத பிறத்தல் இறத்தலாகிய சூழலில் சிக்கியிருக்கிறேன் இறைவா! கருணையுடன் நிலையை அளிக்கவேண்டும் என்பது கருத்து.

# 22

## யோகி பித்தன்போலிருப்பான்

ரத்யா–கர்ப்பட–விரசித–கந்த:
புண்யா–புண்ய–விவர்ஜித–பந்த: |
யோகீ யோக–நியோஜித–சித்த:
ரமதே பாலோந்மத்தவதேவ ||

### பதவுரை

| | |
|---|---|
| **யோக–நியோஜித–சித்த:** | – யோகத்தில் இணைக்கப்பட்ட உள்ளத்தையுடைய |
| **யோகீ** | – யோகியானவன் |
| **ரத்யா–கர்ப்பட–விரசித–கந்த:** | – தெருவில் கிடக்கும் கந்தல் துணியால் கோவணம் கட்டியிருப்பான் |
| **புண்யா புண்ய–விவர்ஜித–பந்த:** | – புண்ணியம், பாவம் இரண்டும் இல்லாத (தனி) வழியைப்பின் பற்றியவன் |
| **பால–உந்மத்தவத்–ஏவ** | – குழந்தை போலவும், பித்தன் போலவும் |
| **ரமதே** | – (தனக்குத்தானே) மகிழ்ச்சி யடைகிறான். |

### கருத்துரை

ஆண்டவனிடம் உள்ளத்தைச் செலுத்தி உலகை மறந்த யோகியானவன், ஒரு குழந்தைபோலவும், பைத்தியம் பிடித்தவன்போலவும் காணப்படுவான் ; அவன் தெருவில் கிடக்கும் கந்தல் துணியைக் கோவணமாக அணிந்துகொள்வான். அவன் செயலெல்லாம் புண்ணியமா, பாவமா, ஆசாரமா, அனாசாரமா என்றெல்லாம் நாம் பகுத்தறியமுடியாதபடி ஒரு தனி முறையாக இருக்கும். எனவே, அத்தகைய யோகிகளை நாம் மதித்து நடக்கவேண்டும் என்பது கருத்து.

# 23

## 'நான் யார்?' என்று நினைத்துப் பார்

கஸ்த்வம் கோऽஹம் குத ஆயாத :
காமே ஜநநீ கோ மே தாத: ।
இதி பரிபாவய ஸர்வமஸாரம்
விஶ்வம் த்யக்த்வா ஸ்வப்ந விசாரம் ॥

### பதவுரை

| | | |
|---|---|---|
| த்வம் | – | நீ |
| க: | – | யார்? |
| அஹம் | – | நான் |
| க: | – | யார் |
| குத: | – | எங்கிருந்து |
| ஆயாத: | – | வந்தேன் |
| மே | – | என்னுடைய |
| ஜநநீ | – | தாய் |
| கா | – | எவள்? |
| மே | – | என்னுடைய |
| தாத: | – | தந்தை |
| க: | – | யார்? |
| இதி | – | என்று |
| விஶ்வம் | – | உலகை |
| ஸ்வப்நவிசாரம் | – | கனவுப் பேச்சாக |
| த்யக்த்வா | – | ஒதுக்கிவிட்டு |
| ஸர்வம் | – | அனைத்தையும் |
| அஸாரம் | – | சாரமில்லாததாக |
| பாவய | – | எண்ணுவாயாக |

### கருத்துரை

"நீ யார்? நான் யார்? நான் எங்கிருந்து வந்தேன்? என் தாய் யார்? தந்தை யார்? இதெல்லாம் கனவுக் காட்சி போன்று மாயையல்லவா!" என்று உன் மனதில் பாவனை செய்து, இந்த உலகம் சாரமற்ற பொருள் என்று முடிவு செய்வாயாக !

# 24

## எல்லாம் விஷ்ணுமயம்

த்வயி மயி ஸான்யத்ரைகோ விஷ்ணு:
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு: |
ஸர்வஸ்மிந்நபி பஸ்யாத்மாநம்
ஸர்வத்ரோத்ஸ்ருஜ பேதஜ்ஞாநம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **த்வயி** | – | உன்னிடமும் |
| **மயி** | – | என்னிடமும் |
| **அந்யத்ர ச** | – | வேறு இடத்திலும் |
| **ஏக:** | – | ஒரே |
| **விஷ்ணு:** | – | விஷ்ணுதான் |
| **மயி** | – | என்னிடம் |
| **அஸஹிஷ்ணு:** | – | பொறாமை கொண்டு |
| **வ்யர்த்தம்** | – | வீணாக |
| **குப்யஸி** | – | கோபப்படுகிறாய் |
| **ஸர்வஸ்மிந்** | – | எல்லாவற்றிலும் |
| **ஆத்மாநம்** | – | தன்னையே |
| **பஸ்ய** | – | பார் |
| **ஸான்யத்ர** | – | எல்லாவிடத்திலும் |
| **பேதஜ்ஞாநம்** | – | பித்துப்பார்க்கும் எண்ணத்தை |
| **உத்ஸ்ருஜ** | – | விட்டுவிடு |

### கருத்துரை

உன்னிடமும் என்னிடமும் மற்றெல்லாவிடமும் ஸ்ரீ மஹா விஷ்ணுவாகிய பரமாத்மா பரவியுள்ளான். எனவே, நீ வீணாக என்னிடம் பொறாமை கொண்டு ஏன் என்னைப் பார்த்து கோபப்படுகிறாய்? நீ 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்றபடி எல்லாவிடத்திலும் உன்னையே பார். அப்பொழுது 'நீ, நான்' என்பது போன்ற பேத ஞானம் அகன்றுவிடும்

# 25

## எல்லோரையும் சமமாகப் பார்

ஸத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்நம் விக்ரஹஸந்தௌ |
பவ ஸமசித்த: ஸர்வத்ர த்வம்
வாஞ்ச்சஸ் யசிராத் யதி விஷ்ணுத்வம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **த்வம்** | – | நீ |
| **விஷ்ணுத்வம்** | – | விஷ்ணுத்தன்மையை(முத்தியை) |
| **அசிராத்** | – | விரைவில் |
| **வாஞ்ச்சஸி யதி** | – | விரும்புவாயானால் |
| **த்ரௌ** | – | பகைவனிடத்திலும் |
| **மித்ரே** | – | நண்பனிடத்திலும் |
| **புத்ரே** | – | பிள்ளையிடத்திலும் |
| **பந்தௌ** | | |
| **விக்ரஹ–ஸந்தௌ** | – | சண்டை செய்வதிலும், சமாதானம் செய்வதிலும் |
| **யத்நம்** | – | முயற்சியை |
| **மா** | – | செய்யாதே |
| **குரு** | | |
| **ஸர்வத்ர** | – | எல்லாரிடத்திலும் |
| **ஸமசித்த:** | – | ஒரே விதமான மனமுள்ளவனாக |
| **பவ** | – | இருப்பாயாக |

### கருத்துரை

உனக்கு விரைவில் மோக்ஷ மடையவேண்டுமென்ற விருப்பமிருந்தால், பகைவன், நண்பன், மகன், உறவினன் இவர்கள் யாரிடமும் பகைமையையோ, நட்பையோ பாராட்டாதே. எல்லோரையும் ஒரே விதமாக நினைத்துப் பழகிவிட்டால் உனக்கு மோக்ஷம் விரைவில் கிடைத்துவிடும் என்பது கருத்து.

# 26

## ஆன்மாவை உயர்த்தும் வழி

காமம் க்ரோதம், லோபம் மோஹம்
த்யக்த்வாத்மாநம் பாவய கோऽஹம் |
ஆத்ம–ஜ்ஞாந–விஹீநா மூடா:
தே பச்யந்தே நரக–நிகூடா: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **காமம்** | – | காமம் |
| **க்ரோதம்** | – | கோபம் |
| **லோபம்** | – | பணத்தாசை |
| **மோஹம்** | – | மயக்கம் (என்பவைகளை) |
| **த்யக்த்வா** | – | விட்டு |
| **அஹம்** | – | நான் |
| **க:** | – | யார் (என்று) |
| **ஆத்மாநம்** | – | தன்னைப்பற்றி |
| **பாவய** | – | |
| **(யே)** | – | எந்த |
| **மூடா:** | – | மூடர்கள் |
| **ஆத்மஜ்ஞாநவிஹீநா:** | – | ஆன்மஞான மில்லாதவர்களோ |
| **தே** | – | அவர்கள் |
| **நரகநிகூடா:** | – | நரகத்தில் மூழ்கி |
| **பச்யந்தே** | – | துன்பத்தை அனுபவிக்கிறார்கள் |

### கருத்துரை

'தான் யார் ?' என்பதை அறிதலாகிய ஆன்ம ஞானமில்லாத மூடர்கள் நரகத்தில் உழல்வார்கள். ஆகவே, காமம், கோபம், பணத்தாசை, மதிமயக்கம் என்பவைகளைத் துறந்து 'நான் யார்?' என்பதை எப்பொழுதும் சிந்தனை செய்யவேண்டும்.

# 27

## நாம் என்ன செய்யவேண்டும் ?

கேயம் கீதா–நாம–ஸஹஸ்ரம்
த்யேயம் ஸ்ரீபதி–ரூப–மஜஸ்ரம் |
நேயம் ஸஜ்ஜநஸங்கே சித்தம்
தேயம் தீநஜநாய ச வித்தம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **கீதா–நாமஸஹஸ்ரம்** | – | கீதையும் (விஷ்ணு) ஸஹஸ்ர நாமமும் |
| **கேயம்** | – | பாடப்படவேண்டும் |
| **ஸ்ரீபதிரூபம்** | – | ஸ்ரீ மந்நாராயணனுடைய உருவம் |
| **அஜஸ்ரம்** | – | எப்பொழுதும் |
| **த்யேயம்** | – | தியானம் செய்யப்படவேண்டும் |
| **சித்தம்** | – | மனமானது |
| **ஸஜ்ஜந–ஸங்கே** | – | நல்லோர்களுடைய சேர்க்கையில் |
| **நேயம்** | – | அடைவிக்கப்படவேண்டும் |
| **தீநஜநாய** | – | ஏழை மக்களுக்கு |
| **வித்தம்** | – | பணமானது |
| **தேயம்** | – | கொடுக்கப்படவேண்டும் |

### கருத்துரை

நற்கதியை அடைய விரும்புபவர்கள், தினந்தோறும் பகவத்கீதையையும் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தையும் பாராயணம் செய்ய வேண்டும். எப்பொழுதும் பகவானுடைய உருவத்தை தியானம் செய்து கொண்டிருக்க வேண்டும். நல்லவர்களுடைய சேர்க்கையில் மனத்தைச் செலுத்த வேண்டும். ஏழை மக்களுக்கு இயன்றதைக் கொடுத்து உதவவேண்டும்.

# 28

## பாவம் செய்வதை விடுவதில்லையே !

ஸுகத: க்ரியதே ராமாபோக:
பஸ்சாத் ஹந்த ஸரீரே ரோக: |
யத்யபி லோகே மரணம் ஸரணம்
ததபி ந முஞ்சதி பாபாசரணம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **ராமாபோக:** | – | பெண்ணினுடைய அநுபவம் |
| **ஸுகத:** | – | சுகமாக |
| **க்ரியதே** | – | செய்யப்படுகிறது |
| **பஸ்சாத்** | – | பிறகு |
| **ஹந்த!** | – | ஐயோ ! |
| **ஸரீரே** | – | உடலில் |
| **ரோக:** | – | நோய் (உண்டாகிறது) |
| **யத்யபி** | – | எப்படியாயினும் |
| **லோகே** | – | உலகில் |
| **மரணம்** | – | மரணம் என்பது |
| **ஸரணம்** | – | முடிவானது |
| **ததபி** | – | அப்படியிருந்தாலும் |
| **பாபாசரணம்** | – | பாவத்தைச் செய்தலை |
| **ந முஞ்சதி** | – | விடுவதில்லை |

### கருத்துரை

உலகில், சுகமாக இருக்கிறதென்று பெண்ணுடன் முதலில் கூடுகிறான். ஆனால், பிறகு அவன் நோயால் பீடிக்கப்படுகிறான். மரணம் தவிர்க்கமுடியாததெனத் தெரிந்தும் பாவம் செய்வதை எவனும் விடுவதில்லையே!

# 29

## பணமென்பது துன்பமே

அர்த்த–மநர்த்தம் பாவய நித்யம்
நாஸ்தி தத: ஸுகலேஸ: ஸத்யம் |
புத்ராதபி தநபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி: ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| அர்த்தம் | – | பணத்தை |
| நித்யம் | – | எப்பொழுதும் |
| அநர்த்தம் | – | துன்பமென்று |
| பாவாய | – | எண்ணு |
| தத: | – | அதிலிருந்து |
| ஸுகலே: | – | சிறிதளவு சுகமும் |
| நாஸ்தி | – | இல்லை |
| ஸத்யம் | – | (இது) உண்மை |
| புத்ராத் | – | பிள்ளையிடமிருந்து |
| தநபாஜாம்அபி | – | பயம்தான் |
| பீதி: | – | இந்த |
| ஏஷா | – | முறை |
| ரீதி: | – | எல்லாவிடத்திலும் |
| ஸர்வத்ர | – | ஏற்பட்டதுதான் |
| விஹிதா | | |

### கருத்துரை

பணத்தைச் சுகமென்று எண்ணாதே. அது எப்பொழுதும் துன்பத்தைத் தருவதுதான் என்று எண்ணு. அதனால் சிறிதும் ஸுகமில்லை. பிள்ளையிடமிருந்து பணம் வாங்கினாலும் பயம்தான். எல்லாவிடத்திலும் பணத்தால் ஏற்படக்கூடிய துன்பம் சமமானதுதான்.

# 30

## மனத்தைக் கட்டுப்படுத்து

ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்ய–விவேக–விசாரம் ।
ஜாப்ய–ஸமேத–ஸமாதி–விதாநம்
குர்வவதாநம் மஹதவதாநம் ॥

### பதவுரை

**ப்ராணாயாமம்** – மூச்சுக்காற்றை நிறுத்துதலையும்
**ப்ரத்யாஹாரம்** – புலனடக்கத்தையும்
**நித்யாநித்ய விவேக விசாரம்** – நிலையானது நிலையற்றது என்ற பாகுபாட்டைப் பற்றி யோசித்தலையும்
**ஜாப்ய–ஸமேத–ஸமாதி விதாநம்** – மந்த்ரஜபத்துடன் கூடிய சமாதியை அநுஷ்டித்தலையும்
**அவதாநம்** – மனம் ஒருநிலைபடுத்தலையும்
**மஹத்** – பெரியதான
**அவதாநம்** – ஒருநிலைப்பாட்டையும்
**குரு** – செய்வாயாக

### கருத்துரை

பிராணாயாமம் என்னும் மூச்சுக் காற்றை அடக்குதலையும், பிரத்தியாஹாரம் என்னும் புலனடக்கத்தையும், நிலையான பொருள் எது, நிலையற்ற பொருள் எது என்ற பாகுபாட்டை யோசித்தலையும், ஜபத்தையும், சமாதி என்னும் அசையா நிலையையும், மனத்தின் ஒரு நிலைப்பாட்டையும் நீ ஏற்றுச் செய்தல் வேண்டும்.

# 31

## குருவின் திருவடிகளே சரணம் !

குரு–சரணாம்புஜ–நிர்ப்பர–பக்த:
ஸம்ஸாரா–தசிராத்–பவமுக்த: |
ஸேந்த்ரிய–மாநஸ–நியமா–தேவம்
த்ரக்ஷ்யஸி நிஜ–ஹ்ருதயஸ்த்தம் தேவம் ||

### பதவுரை

| | | |
|---|---|---|
| **குரு–சரணாம்புஜ– நிர்ப்பர–பக்த:** | – | குருவினுடைய திருவடிக் கமலங்களில் பாரத்தை வைத்து பக்தி செய்பவன் |
| **அசிராத்** | – | விரைவில் |
| **ஸம்ஸாராத்** | – | உலகிலிருந்து |
| **பவமுக்த:** | – | பிறவியற்றவனாகி |
| **ஏவம்** | – | இப்படி |
| **ஸேந்த்ரிய–மாநஸ– நியமாத்** | – | புலன்களையும் மனதையும் கட்டுப்படுத்துவதாலே |
| **நிஜஹ்ருதயஸ்த்தம்** | – | தன் உள்ளத்தில் உள்ள |
| **தேவம்** | – | இறைவனை |
| **த்ரக்ஷ்யஸி** | – | பார்க்கப் போகிறாய் |

### கருத்துரை

நீ உன்னுடைய புண்ணிய பாபங்களாகிய பாரத்தையெல்லாம் குருவினிடம் அர்ப்பணம் செய்து, பக்தி செய்தாயானால் விரைவிலேயே உனக்குப் பிறவித்தளை நீங்கும். புலன்களையும் மனதையும் கட்டுப்படுத்துவாயானால் உன் உள்ளத்திலேயே அந்தர்யாமியாகத் தங்கியுள்ள பகவானைத் தரிசிப்பாய்.

|| ஸ்ரீ: ||

# ஸ்ரீ ஹரி ஹர ஸ்தோத்ரம்

(இந்த ஸ்தோத்திரத்திலுள்ள சிவகேசவநாமங்களை ஜபிப்பவர்களை விட்டுவிடு' என்று யமன் தன் தூதர்களுக்குக் கூறுகிறானாம்.)

கோவிந்த மாதவ முகுந்த ஹரே முராரே
ஸம்போ ஸிவேஸ ஸஸிஸேகர ஸூலபாணே ।
தாமோதராச்யுத ஜநார்தந வாஸுதேவ
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

கங்கா தராந்தகரிபோ ஹர நீலகண்ட
வைகுண்ட கைடபரிபோ கமடாப்ஜபாணே ।
பூதேஸ கண்டபரஸோ ம்ருட சண்டிகேஸ
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

விஷ்ணோ ந்ருஸிம்ஹ மதுஸூதந சக்ரபாணே
கௌரீபதே கிரிஸ ஸங்கர சந்த்ரசூட ।
நாராயணாஸுர நிபர்ஹண ஸார்ங்கபாணே
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

ம்ருத்யுஞ்ஜயோக்ர விஷபக்ஷண காமஸத்ரோ
ஸ்ரீகாந்த பீ தவஸநாம்புதநீல ஸௌரே।
ஈஸாந க்ருத்திவஸந த்ரிதஸைகநாத
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

லக்ஷ்மீபதே மதுரிபோ புருஷோத்தமாத்ய
ஸ்ரீகண்ட திக்வஸந ஸாந்த பிநாகபாணே ।
ஆநந்தகந்த தரணீதர பத்மநாப
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

ஸர்வேஸ்வர த்ரிபுரஸூதந தேவதேவ
ப்ரஹ்மண்யதேவ கருடத்வஜ ஸங்கபாணே ।
த்ர்யக்ஷோரகாபரண பாலம்ருகாங்க மௌளே
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

ஸ்ரீ ராம ராகவ ரமேஸ்வர ராவணாரே
பூதேஸ மந்மதரிபோ ப்ரமதாதிநாத ।
சாணூரமர்த்தந ஹ்ருஷீகபதே முராரே
த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

ஸூலிந் கிரீஸ ரஜநீஸ கலாவதம்ஸ
    கம்ஸப்ரணாஸந ஸநாதந கேஸிநாஸ ।
பர்க த்ரிநேத்ர பவ பூதபதே புராரே
    த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

கோபீபதே யதுபதே வஸுதேவஸூநோ
    கர்ப்பூரகௌர வ்ருஷபத்வஜ பாலநேத்ர ।
கோவர்தநோத்தரண தர்மதுரீண தேவ
    த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

ஸ்த்தாணோ த்ரிலோசந பிநாகதர ஸ்மராரே
    க்ருஷ்ணாநிருத்த கமலாகர கல்மஷாரே।
விஸ்வேஸ்வர த்ரிபதகார்த்ர ஜடாகலாப
    த்யாஜ்யா படா ய இதி ஸந்தத மாமநந்தி ॥

அஷ்டோத்தராதிக ஸதேந ஸுசாரு நாம்நாம்
    ஸந்தர்ப்பிதாம் லலிதரத்த கதம்பகேந ।
ஸந்நாயகாம் த்ருடகுணாம் நிஜகண்டகாம் ய:
    சூர்யாதிமாம் ஸ்ரஜமஹோ ஸ யமம் ந பஸ்யேத் ॥

**கணாவூசது :–**

இத்தம் த்விஜேந்தர நிஜப்ருத்யகணாந் ஸதைவ
    ஸம்ஸிக்ஷயே தவநிகாந் ஸ ஹி தர்மராஜ: ।
அந்யேபி யே ஹரி ஹரார்க்கதரா தராயாம்
    தே தூரத: புநரஹோ பரிவர்ஜநீயா: ॥

**அகஸ்த்ய உவாச–**

யோ தர்மராஜரசிதாம் லலிதப்ரபந்தாம்
    நாமாவளிம் ஸகல கல்மஷ பீஜஹந்த்ரீம் ।
தீரோத்ர கௌஸ்துபப்ருத: ஸஸிபூஷணஸ்ய
    நித்யம் ஜபேத் ஸ்தநரஸம் ந பிபேத் ஸ மாது: ॥

இதி ஸ்ருண்வந் கதாம் ரம்யாம் ஸிவஸர்மா ப்ரியோSநகாம்
ப்ரஹர்ஷவக்த்ர: புரதோ ததர்ஸாப்ஸரஸாம் புரீம்

**இதி ஸ்ரீஸ்காந்தபுராணே காஶீகண்டே தர்மராஜவிரசிதம் ஹரிஹராஷ்டோத்தர ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்.**

|| ஸ்ரீ: ||

## திருச்சித்ரகூடம்
## தில்லை ஸ்ரீ கோவிந்தராஜன்
## மங்களாசாஸனப் பாசுரங்கள்

**ஊன்வாட வுண்ணா துயிர்காவ லிட்டே**
**உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து,**
**தாம்வாட வாடத் தவம்செய்ய வேண்டா**
தமதா இமையோ ருலகாள கிற்பீர்,
கானாட மஞ்ஞைக் கணமாட மாடே
கயலாடு கானீர்ப் பழனம் புடைபோய்,
தேனாட மாடக் கொடியாடு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே.

**காயோடு நீடு கனியுண்டு வீசு**
**கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம், ஐந்து**
**தீயோடு நின்று தவஞ்செய்ய வேண்டா**
திருமார்ப னைச்சிந்தை யுள்வைத்து மென்பீர்,
வாயோது வேதம் மல்கின்ற தொல்சீர்
மறையாளர் நாளும் முறையால் வளர்த்த,
தீயோங்க வோங்கப் புகழோங்கு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே.

**– திருமங்கையாழ்வார்**
பெரிய திருமொழி 3–2–1,2

# ஸ்ரீ பால முகுந்தாஷ்டகம்

கராா விந்தேன பதாரவிந்தம்
முகாரவிந்தே விநிவேச'யந்தம் ।
வடஸ்ய பத்ரஸ்ய புடே ச'யானம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (1)

ஸம்ஹ்ருத்ய லோகான் வடபத்ரமத்யே
ச'யாந மாத்யந்த விஹீனரூபம் ।
ஸர்வேச்'வரம் ஸர்வ ஹிதாவாரம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (2)

இந்தீவர ச்'யாமல கோமலாங்கம்
இந்த்ராதி தேவார்சித பாதபத்மம் ।
ஸந்தான கல்பத்ரும மாச்'ரிதா னாம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (3)

லம்பாலகம் லம்பித ஹாரயஷ்டிம்
ச்'ருங்கார லீலாங்கித தந்த பங்க்திம் ।
பிம்பாதரம் சாரு விசா'ல நேத்ரம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (4)

சி'க்யே நிதாயாத்ய பயோததீனி
பஹிர்கதாயாம் வ்ரஜ நாயிகாயாம் ।
புக்தவா யதோஷ்டம் கபடேன ஸுப்தம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (5)

கலிந்தஜாந்த ஸ்த்தித காலியஸ்ய
ஃபணாக்ரரங்கே நடன ப்ரியந்தம் ।
தத் புச்ச ஹஸ்தம் ச'ரதிந்து வக்த்ரம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (6)

உலூர்கலே பத்த முதார சௌ'ர்யம்
உத்துங்கயுக்மார்ஜுனபங்க லீலம் ।
உந்புல்ல பத்மாயத சாரு நேத்ரம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (7)

ஆலோக்ய மாதுர் முகமாதரேண
ஸ்தந்யம் பிபந்தம் ஸரஸீருஹாக்ஷம் ।
ஸச்சிந்மயம் தேவமனந்த ரூபம்
பாலம் முகுந்தம் மனஸா ஸ்மராமி ॥ (8)

**இதி ஸ்ரீ பாலமுகந்தாஷ்டகம் ஸம்பூர்ணம்**

---

**ஸ்ரீ வல்லபாசார்யார் அருளிய**

## ஸ்ரீ மதுராஷ்டகம்

அதரம் மதுரம் வதனம் மதுரம் நயனம் மதுரம் ஹஸிதம் மதுரம் ।
ஹ்ருதயம் மதுரம் கமனம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (1)

வசனம் மதுரம் சரிதம் மதுரம் வஸனம் மதுரம் வலிதம் மதுரம் ।
சலிதம் மதுரம் ப்ரமிதம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (2)

வேணுர் மதுரோ ரேணுர் மதுர:பாணிர் மதுர:பாதௌ மதுரௌ ।
ந்ருத்யம் மதுரம் ஸக்யம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (3)

கீதம் மதுரம் பீதம் மதுரம் புக்தம் மதுரம் ஸுப்தம் மதுரம் ।
ரூபம் மதுரம் திலகம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (4)

கரணம் மதுரம் தரணம் மதுரம் ஹரணம் மதுரம் ஸ்மரணம் மதுரம் ।
வமிதம் மதுரம் ச’மிதம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (5)

குஞ்ஜா மதுரா மாலா மதுரா யமுனா மதுரா வீசீ மதுரா ।
ஸலீலம் மதுரம் கமலம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (6)

கோபீ மதுரா லீலா மதுரா யுக்தம் மதுரம் புக்தம் மதுரம் ।
த்ருஷ்டம் மதுரம் சி’ஷ்டம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (7)

கோபா மதுரா காவோ மதுரா: யஷ்டிர் மதுரா ஸ்ருஷ்டிர் மதுரா ।
தலிதம் மதுரம் ஃபலிதம் மதுரம் மதுராதிபதே ரகிலம் மதுரம் ॥ (8)

**இதி ஸ்ரீ வல்லபாசார்யார் அருளிய ஸ்ரீ மதுராஷ்டகம் ஸம்பூர்ணம்**

--------

## ஸ்ரீ ரங்கநாதாஷ்டகம்

ஆனந்தரூபே நிஜபோதரூபே
ப்ரஹ்ம ஸ்வரூபே ச்’ருதிமூர்த்திரூபே ।
ச’சா’ங்கரூபே ரமணீயரூபே
ஸ்ரீ ரங்க ரூபே ரமதாம் மனோ மே ॥ (1)

காவேரிதீரே கருணா விலோலே
மந்தாரமூலே த்ருதசாரு கேலே ।
தைத்யாந்த காலே (அ) கிலலோகலீலே
ஸ்ரீ ரங்கலீலே ரமதாம் மனோ மே ॥ (2)

லக்ஷ்மீ நிவாஸே ஜகதாம் நிவாஸே
ஹ்ருத்பத்ம வாஸே ரவிபிம்ப வாஸே ।
க்ருபா நிவாஸே குணப்ருந்த வாஸே
ஸ்ரீ ரங்க வாஸே ரமதாம் மனோ மே ॥ (3)

ப்ரஹ்மாதி வந்த்யே ஜகதேக வந்த்யே
முகுந்த வந்த்யே ஸுரநாத வந்த்யே ।
வ்யாஸாதி வந்த்யே ஸநகாதி வந்த்யே
ஸ்ரீ ரங்க வந்த்யே ரமதாம் மனோ மே ॥ (4)

ப்ரஹ்மாதிராஜே கருடாதி ராஜே
வைகுண்ட ராஜே ஸுரராஜ ராஜே ।
த்ரைலோக்ய ராஜே(அ) கிலலோக ராஜே
ஸ்ரீ ரங்க ராஜே ரமதாம் மனோ மே ॥ (5)

அமோக முத்ரே பரிபூர்ண நித்ரே
ஸ்ரீயோக நித்ரே ஸஸமுத்ர நித்ரே ।
ச்’ரிதைக பத்ரே ஜகதேக பத்ரே
ஸ்ரீ ரங்க ராஜே ரமதாம் மனோ மே ॥ (6)

ஸசித்ர சா’யீ புஜகேந்த்ர சா’யீ
நந்தாங்க சா’யீ கமலாங்க சா’யீ ।
க்ஷீராப்திசா’யீ வடபத்ராசா’யீ
ஸ்ரீ ரங்கசா’யீ ரமதாம் மனோ மே ॥ (7)

இதிம்ஹி ரங்கம் த்யஜதா மிஹாங்கம்
புனர் நசா’ங்கம் யதி சா’ங்க மேதி ।
பாணௌ ரதாங்கம் ச’ரணோ(அ)ம்பு காங்கம்
யானே விஹங்கம் ச’யனே புஜங்கம் ॥ (8)

ரங்கநாதாஷ்டகம் புண்யம் ப்ராதருத்தாய ய: படேத் ।
ஸர்வான் காமாநவாப்நோதி ரங்கிஸாயுஜ்ய மாப்னுயாத் ॥ (9)

**இதி ஸ்ரீ ரங்கநாதஷ்டகம் ஸம்பூர்ணம்**

**-- சுபம் --**

